*Railway Cess Fund*

10 a.m. * 547 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா போர்டுக்கு கிடைத்த ரயில்வே செஸ் நிதியைப் பயன்படுத்துவதுபற்றி அந்த போர்டு ஏதேனும் தீர்மானம் அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறதா ?

(ஆ) அப்படியானுல், அதன் விவரங்கள் என்ன ?

(இ) அதுபற்றி அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (*a*), (*b*) & (*c*) Presumably the Member refers to the sale proceeds of the financial interests of the Tanjore District Board in the Railways. If so, the answer is in the affirmative. The Special officer, Tanjore District Board has been asked to address the Government in detail on each of the proposals of the late district board. Orders will be issued on receipt of those proposals.

A list [a] showing the subjects on which the late district board proposed to utilize the sale proceeds of the financial interests in the Railways is placed on the table of the House.

SRI A. VEDARATHNAM: ஜில்லாபோர்டு இருந்த காலத்தில் இந்த ரயில்வே செஸ் நிதி விஷயமாக அவர்கள் ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள். அதற்கு அவர்களுக்கு தகுதி உண்டா ? அப்படியானுல் அவர்கள் நிறைவேற்றிய தீர்மானம் அங்கீகரிக்கப்பட்டு, அமுலுக்குக் கொண்டுவரப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: இது விஷயமாக தஞ்சாவூர் ஜில்லா போர்டின் தகுதியுள்ள அல்லது தகுதியற்ற தன்மையைப் பற்றி நான் இப்பொழுது கூறமுடியாது. ஆனுல் அவர்கள் அனுப்பிய அந்தத் தீர்மானங்கள் இப்பொழுது பரிசீலனைக்கு திரும்பவும் ஸ்பெஷல் ஆபீஸருக்கு அனுப்பப்பட்டிருக்கின்றன.

MR. SPEAKER: இப்பொழுது 10 மணி ஆகிவிட்டது. இன்னும் மூன்று கேள்விகள் இருக்கின்றன. இன்னும் ஐந்து நிமிஷம் எடுத்துக் கொண்டு, அவைகளையும் முடித்துவிடலாம் என்று நினைக்கிறேன்.

SRI M. P. SUBRAMANIAM: ஜில்லா போர்டு வசமுள்ள இந்த ரயில்வே செஸ் பண்டை ஜில்லா போர்டு எந்த காரியத்திற்கு வேண்டுமானுலும் செலவு செய்வதற்கு உரிமை உண்டா ? அல்லது குறிப்பிட்ட காரியங்களுக்கு மட்டும்தான் செலவு செய்யப்படவேண்டுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: ஜில்லா போர்டு குறிப்பிட்டு சிபார்சு செய்தவைகளின் ஜாபிதா மேஜையின் மீது வைக்கப்பட்டிருக்கிறது. அவைகளைத்தான் இப்பொழுது திரும்பவும் பரிசீலனை செய்யவேண்டிய நிலைமை இருக்கிறது.

SRI S. NAGARAJA MONIGAR: இம்மாதிரி கோரிக்கை தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து மட்டும்தான் வந்திருக்கிறதா ? அல்லது வேறு ஜில்லாக்களிலிருந்தும் வந்திருக்கிறதா என்பதை அறியவிரும்புகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: தஞ்சாவூர் ஜில்லா நிதியைப்பற்றிய தீர்மானம் அந்த ஜில்லாவிலிருந்துதான் வரமுடியும். மற்ற ஜில்லாக்களிலிருந்து வரமுடியாது.

---

[a] Printed as Appendix on page 751 infra.